பொருள்களின்) கூட்டத்தைவிட வேறுபட்டவனும் எல்லையான காரண மானவனும் அளவிறந்த ஒளியுடைய வனும் எல்லாமறிந்தவனும் நினைத்த காரியத்தைத் தலைக்கட்டவல்லவனு மான புருஷோத்தமனு என்று" என் றுள்ளமை காண்க.

இங்கு மிகச் சிறந்த ஒளியை யுடைய ப்ரஹ்மத்தை விசேஷ்யமாக வும் (=அடைகொளியாகவும்), சூரி யன் முதலிய ஜ்யோதிஸ்ஸோடு ஒன்று படுதல் அவற்றோடு வேறுபடுதல் ஆகிய இரண்டையும் விசேஷணங் களாகவும் (=அடையாகவும்) கொண்ட ஸந்தேஹமே கருதப்பட்ட தாகும். மிகச் சிறந்த ஒளியை யுடைய பொருளை விசேஷ்யமாகவும் சூரியன் முதலியவற்றோடு ஒன்றுபடு தல் அவற்றோடு வேறுபட்ட ப்ரஹ் மத்தோடு ஒன்றுபடுதல் ஆகிய இரண் டினையும் விசேஷணங்களாகவும் கொண்ட ஸந்தேஹம் கருதப்பட வில்லை. முற்கூறிய பாஷ்ய வாக்கி யத்திலிருந்து அப்படிப்பட்ட ஸந் தேஹம் தோன்றுமையே இதற்குக் காரணம். அப்படிக் கருதப்பட்டிருந் தால், மிகச் சிறந்த ஒளியையுடைய பொருள் - பிரசித்தமான சூரியன் முதலான தேஜஸ்ஸா அல்லது பர ப்ரஹ்மமா என்றே ஸந்தேஹத்தின் உருவம் அமைந்திருக்கும். மிகச் சிறந்த ஒளியையுடைமை உலகனைத் துக்கும் காரணமாயிருக்குந்தன் மையை ஊகித்தறிவிக்கும் அடை யாளமன்றோ? 'ந தத்ர ஸூர்யோ பாதி' (முண்டகோப 2-2-11) அந்த ப்ரஹ்மம் பிரகாசிக்கும்போது சூரி யன் பிரகாசிப்பதில்லை என்பது தொடங்கி, மிகச் சிறந்த ஒளியு டைமை கூறும் சந்தர்ப்பத்தில் 'ததா அக்ஷராத் ஸம்பவதீஹ விச்வம்' (முண்டகோப 1-1-8) அப்படியே விகாரம் (மாறுபடுதல்) இல்லாத ப்ரஹ்மத்திலிருந்து இங்கு எல்லாப் பொருளும் உண்டாகின்றன என்று மிகச் சிறந்த ஒளியுடைய பொரு ளுக்கு உலகனைத்தையும் பற்றக் காரணமாயிருக்குந் தன்மை கேட்கப் படுதலால் அக்கருத்து வலியுறும். அத்தன்மையோவெனில் பரப்ரஹ் மத்திற்கு ஏற்பட்ட தனிச் சிறந்த அடையாளமாகும். ஆதலால் இங் கும் மிகச் சிறந்த ஒளியுடைமையைக் கொண்டு பரப்ரஹ்மமாயிருக்குந் தன்மை நிச்சயிக்கப்பட்டுவிட்ட போதிலும், அத்தகைய ப்ரஹ்மத் திற்கு பிரசித்தமான சூரியன் முதலிய ஜ்யோதிஸ்ஸோடு ஒற்றுமை வேற் றுமைகளாகிய இரண்டையும் விசேஷ ணங்களாகக் கொண்ட ஸந்தேஹம் வர இடமிருப்பதனுல் அதைத் தீர்ப் பதற்காக முற்கூறிய ஜ்யோதிரதி கரணம் தொடங்கியது தகுதியுடைய தாகும்.

இஃதெல்லாம் ச்ருத ப்ரகாசிகை யில் - 'ப்ரஹ்மம் பிரகாசிக்கும்போது சூரியன் பிரகாசிப்பதில்லை......ப்ரஹ் மத்தின் ஒளியைக் கொண்டே சூரியன் முதலிய இவையெல்லாம் பிரகாசிக் கின்றன' (முண்டகோப 2-2-11) என்று கூறும் சந்தர்ப்பத்தில், 'அங் ஙனமே மாறுபடுதல் இல்லாத ப்ரஹ் மத்திலிருந்து இங்கு எல்லாப் பொரு ளும் உண்டாகின்றன' (முண்டகோப 1-1-8) என்று மிகச் சிறந்த ஒளி யுடைய பொருளுக்குக் காரணத்வம் கேட்கப்படுதலால், மிகச் சிறந்த ஒளி யுடைமையே காரணத்வத்தை ஊஹித்தறிவிக்கும் அடையாள மாகும். அந்த சந்தர்ப்பம் கார ணத்தை அறிவிப்பதென்பது யாரா லும் மறுக்கப்படவில்லையன்றோ? பர மாத்மாவை அறிவிப்பதா அன்று என்னும் விஷயத்திலன்றோ கருத்து வேற்றுமை உள்ளது. மிகச் சிறந்த ஒளியோடு கூடியதனுல் காரணமான ப்ரஹ்மமாயிருந்து கொண்டு ஜ்யோ திஸ்ஸு என்ற சொல்லால் குறிக்கப் பட்ட பொருளானது - பிரசித்தமான சூரியன் முதலிய ஜ்யோதிஸ்ஸேதானு என்று அந்வயம் (பாஷ்யத்தில்) கருதப்பட்டது - என்று ஸ்பஷ்டமாக உள்ளது.

தெரிந்து கொள்ளுங்கள்

## அஷ்டமா சித்துக்கள்

1. **அணிமா :** மிகச் சிறிய உயிர்களிடம் அவற்றினுஞ் சிறிய உருவினராகக் கலந்து நிற்பர்.

2. **மகிமா :** ஐம்பூதத் தத்துவங்களில் அகமும் புறமும் இடை யறாது நிற்குந் தன்மை.

3. **லகிமா :** மலைபோல் பாரமாயிருந்தாலும் பரமாணுக்கள் போல் இருத்தல்.

4. **கரிமா :** பரமாணு போன்ற வடிவாயிருந்தாலும் மாபெரும் மலைபோன்று கனத்திருத்தல்.

5. **பிராப்தி :** எப்பொருளை விரும்புகின்றனரோ அப்பொருளைப் பெறல்.

6. **பிராகாமியம் :** தன் உடலை விட்டு பிற உடலில் புகுதல்.

7. **ஈசத்வம் :** கடவுள் தன்மை அடைதல்.

8. **வசித்வம் :** மனிதர், விலங்கு, ஊர்வன, பறப்பன முதலிய எல்லாவகைத்தாய உயிர்களையும் தம் வயப்படுத்திக்கொள்ளும் வன்மை.

**கமலா மாரியப்பன் — கோயம்புத்தூர்.**

இங்கு, 'மிகச் சிறந்த ஒளியோடு கூடியதனுல் காரணமான ப்ரஹ்ம மாயிருந்துகொண்டு ஜ்யோதிஸ்ஸு என்ற சொல்லால் குறிக்கப்பட்ட பொருள்' என்பது ஸந்தேகத்திற்கு இலக்கான விசேஷ்யத்தைக் குறிப்ப தாகும். 'பிரசித்தமான சூரியன் முத லிய ஜ்யோதிஸ்ஸேதானு' என்பது ஸந்தேஹத்தில் தோன்றும் ஒரு விசேஷணத்தைக் குறிப்பதாகும். 'அல்லது அதைக் காட்டிலும் வேறொன்று' என்னும் மற்றொரு விசேஷணம் பொருளாற்றலால் பெறப்படுவதாகும். ஆகையால் மிகச் சிறந்த ஒளியுடைமையென்பது ப்ரஹ்மத்தின் தனிப்பட்டதொரு தன்மை என்று கொள்வதில் குற்றம் ஏதுமில்லை.

இப்படியே 'எந்த பரமாத்மாவைக் காட்டிலும் வேறுபட்ட பொருள்களி லேயே-வருஷம் என்னும் காலமானது, தனது அவயவமான தினங்களால் அளவுபடுத்துவதாக உள்ளதோ, சூரி யன் முதலிய ஜ்யோதிஸ்ஸுக்களேயும் பிரகாசிக்கச் செய்யுமதும் காலத்தால் அளவுபடாததும் உயிரனைத்தும் பிழைத்திருத்தற்குக் காரணமானது மான அப்பரமாத்மாவையே தேவர் கள் உபாஸிக்கிருர்கள்' என்று பிருஹ தாரண்யகம் ஆருமத்தியாயம் நான் காம் ப்ராஹ்மணம் பதினுருவது மந் திரத்தில், ப்ரஹ்மம் சூரியன் முதலிய ஜ்யோதிஸ்ஸுக்களேயும் விளங்கச் செய்யுமது என்று மிகச் சிறந்த ஒளி யுடையதாகவும் எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்யுமதாகவும் கூறப் பட்டுள்ளதனுல், மிகச் சிறந்த ஒளி யுடைமையென்பது ப்ரஹ்மத்தின் தனிப்பட்ட தன்மையாகும். அதி லுள்ள, மிகச் சிறந்த ஒளியுடைய பொருளைக் கூறும் ஜ்யோதிஸ்ஸு என்னும் சொல்லானது ப்ரஹ்மத் தையே குறிக்கின்றது என்பதில் விவாதம் ஏதுமில்லையல்லவா? அத ஞல்தான் மத்வதிகரணத்தில் 'ஜ்யோ திஷி பாவாச்ச' (ப்ரஹ்மஸூத்ரம் 1-3-31) என்று ஜ்யோதிஸ்ஸு என்ற சொல்லால் ப்ரஹ்மத்தைக் குறித் துள்ளமையும் பொருந்துகிறது.

இங்ஙனமே கடவல்லியில் இரண் டாவது வல்லியில் (15) 'அந்த ப்ரஹ் மம் பிரகாசிக்கும்போதுசூரியனும் சந்திரனும் நக்ஷத்திரங்களும் பிர காசிப்பதில்லை. அக்நி மட்டும் எங் கிருந்து பிரகாசிக்கப் போகிருன். பிரகாசிக்கிற அந்த ப்ரஹ்மத்தை அனுஸரித்தே இவையனைத்தும் பிர காசிக்கின்றன. அதனுடைய ஒளி யால் இவையெல்லாம் நன்ருகப் பிர காசிக்கின்றன' என்றிந்த மந்திரத் தில் ப்ரஹ்மத்திற்கு மிகச் சிறந்த ஒளியுடைமையும் மற்ற ஒளியுடைய பொருள்கட்கெல்லாம் உதவி செய் யும் தன்மையும் கூறப்பட்டன. அப் படியே முண்டகோபநிஷத்து இரண் டாம் முண்டகம் இரண்டாவது கண் டத்தில் முற்கூறிய மந்திரம் அதே வடிவமுடையதாய்க் கேட்கப்படு கிறது. அதுவும் ப்ரஹ்மத்துக்கு மிகச் சிறந்த ஒளியுடைமையைக் கூறுவதாகும். இங்ஙனமே 'பரம் ஜ்யோதி:' (ச்சாந்தோக்யம் 8-3-4) உயர்ந்த ஒளியுடைய பொருள் என் றிது முதலான ப்ரஹ்மத்தைப் பற்றிய சொற்களும் வேதத்தைச் சேர்ந்தவை உள்ளன.

'சூரியனிடமும் சந்திரனிடமும் அக்நியினிடமும் உள்ள எந்த ஒளிகள் உலகனைத்தும் விளங்கச் செய்கின் றனவோ அவையத்தனையும் என்னு டையவை' (=என்னுல் அவர்களுக்கு அளிக்கப்பட்டவை என்று அறிவா யாக (கீதை 15-12) என்ற பகவத் கீதா வசனமும் இங்கு ப்ரமாண மாகும்.

அத்தகைய பரப்ரஹ்மத்திற்குத் தனிப்பட்டதான இந்த மிகச் சிறந்த ஒளியுடையையானது இங்கு பால காண் டம் பதினைந்தாம் ஸர்க்கத்தில் (16) தேவர்கள் ராவணனிடமிருந்து தங் களுக்கு ரக்ஷணத்தை விரும்பிய இச் சமயத்தில் பேரொளி பொருந்திய விஷ்ணு அவர்களருகில் வந்தனர்' என்று விஷ்ணுவுக்குக் கூறப்பட்ட தாய்க் கொண்டு அவருக்குப் பர ப்ரஹ்மமாந் தன்மையைச் சாதித்துத் தருகிறது.

(தொடரும்)

திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின்

**ஸ்ரீ வேங்கடேஸ்வரா அரும்பொருட் காட்சியகம், திருப்பதி.**

மற்றும்

**பழமைச்சின்னங்களின் காட்சியரங்கு, திருமலை.**

★ திருமலையின் புராணம், சரித்திரம், புவியியல் சம்பந்தப்பட்ட பழமைச் சின்னங்கள் யாவும் வரைபடங்கள், சித்திரங்கள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

★ தி. தி. தேவஸ்தான கோயில்களின் புகைப்படங்கள், அவற்றைப் பற்றிய சரித்திரத் தகவல் கள், ஆர்ஜித சேவைகள் யாவும் சித்தரிக்கப்பட்டுள்ளன.

★ அரியதாகக் கிடைக்கப்பெற்ற இசைக்கருவிகள், மரச்சிற்பங்கள், கற்சிலைகள், சிறு வெண்கலப் பொருட்கள், படைக்கருவிகள் மற்றும் பல இடம் பெற்றுள்ளன.

**தவருது இந்நிலையங்களுக்கு வருகை புரியுங்கள் !**

**அனுமதிக் கட்டணம்:- பெரியோர் ரூ. 1-00 * சிறுர் 0-50 காசு**

# நமது கடமைகள் *

திரு. சி. ஆர். திருவேங்கடத்தான்,
டால்மியாபுரம்.

இப்பூவுலகில் மானிட ஜன்மம் எடுப்பது பூர்வ புண்ணிய பலத்தினுல் தான் என்பது யாவரும் அறிந்ததே. அத்தகைய மானிட ஜன்மத்தை வீணுக்காமல் நம் காலத்தை நல்ல வழியில் செலுத்த வேண்டும். இதனுல் பழைய பாபங்கள் தொலையும். புண்ணியம் பெருகும். இப்பூவுலகில் உள்ளவரையில் சகல சௌபாக்கியங்களுடன் வாழவும், இறுதியில் எம்பெருமானின் நித்ய கைங்கர்ய சாம்ராஜ்யத்தை அடையவும் வழிசெய்து கொள்ளவேண்டும்.

நாம் இப்பொழுது நவீன விஞ்ஞான உலகில் வாழ்ந்து வருகிறேம். காலம் யாருக்காகவும் காத்திருப்பதில்லை. காலத்துடன் போராடியே நாம் முன்னேற வேண்டியிருக்கிறது. லௌகீக வாழ்வில் ஈடுபட்டு அவரவர் குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டியிருக்கிறது. தினமும் விடியற்காலையிலேயே எழுந்திருந்து பல மைல்கள் தள்ளி அமைந்துள்ள அலுவலகங்களுக்குச் செல்ல நம்மைத் தயார் படுத்திக் கொள்கிறேம். இதற்கிடையே நம்மால் வைதீக கர்மாக்களில் ஈடுபட முடிவதில்லை. நேரமும் இல்லை.

இக்கலியுகத்தில் இகபர சுகம் அடைய சில சுலபமான வழிகளை நம் மூதாதையர்களும் மதாச்சார்யர்களும் வகுத்துள்ளனர். தினமும் தூய மனத்துடன் சில நிமிடங்களாவது பகவந் நாமாவை ஜபம் செய்தல் வேண்டும்; எப்பொழுதும் இனிமையாகப் பேச வேண்டும்; பெரியவர்களிடத்தில் பணிவன்புடன் நடக்க வேண்டும்; இயன்றவரை பிறருக்கு உபகாரம் செய்யவேண்டும்; அவரவர் குலதர்மத்தை அநுஷ்டித்து வர வேண்டும்.

தினமும் காலையில் படுக்கையிலிருந்து எழுந்தவுடன் நம் உள்ளங்கைகளைப் பார்த்துக் கொள்ள வேண்டும்.

कराग्रे वसते लक्ष्मीः करमध्ये च सरस्वती ।
करमूले गौरी च प्रभाते करदर्शनम् ॥

அன்றையப் பொழுது நன்ருகக் கழிய வேண்டும் என்றும் பெருமாளை தியானித்துக் கொண்டு எழுந்திருக்க வேண்டும். பெண்கள் வாசலில் சாணித் தண்ணீர் தெளித்துக்கோலம் போட வேண்டும். இவ்விதமாக நாம் லக்ஷ்மியை வீட்டினுள் வரவேற்கிறேம். அரிசிக் கோலமாவு காக்காய்களுக்கும் எறும்புகளுக்கும் உணவாக உள்ளது. வாசலில் தண்ணீர் தெளித்த பிறகுதான் வெளியே செல்லலாம். அல்லது யாதொரு சாமானை கொடுப்பதாக இருந்தாலும் தண்ணீர் தெளித்த பிறகுதான் கொடுத்தல் வேண்டும்.

ஆண், பெண் தலையில் எண்ணெய் வைத்துக்கொள்வதற்கு முன் கீழ்க் கண்ட ஸ்லோகங்களைச் சொல்லி முறையே ஏழு ஐந்து புள்ளிகளை பூமியில் வைக்க வேண்டும்.

1. அஸ்வத்தாமா, பலர் வ்யாய:
ஹனுமாம்ச விபீஷண: |
க்ருப; பரசுராமஸ்ச்ச ஸப்தைதே
சிரஞ்சீவின: ||
2. அஹல்யா, த்ரௌபதி, ஸீதா, தாரா,
மண்டோதரீ ததா |
பஞ்ச கன்யா ஸ்மரேன் நித்யம் மஹா
பாதக நாஸனம்: ||

ஸ்நானத்திற்கு முன் ஸங்கல்பம் செய்து கொள்ள வேண்டும். ஆனல் அதற்கு நமக்கு நேரமில்லை. ஆகையால் கீழ்க்கண்ட ஸ்லோகத்தைச் சொல்லிக்கொண்டே ஸ்நானம் செய்யலாம்:-

1. ஸகல பாப நிவர்த் யர்த்தம்
ஸகல தோஷ நிவர்த் யர்த்தம்
ஸகல ரோஷ நிவர்த் யர்த்தம்
ததங்க ஸ்நானம் கரிஷ்யே!
2. கங்கேச யமுனைசைவ கோதாவரி,
ஸரஸ்வதி |
நர்மதே ஸிந்து காவேரீ ஜலேஸ்மின்
ஸந்நிதிம்குரு ||

ஸ்நானத்திற்குப் பிறகு அவரவர் தர்மத்திற்கு ஏற்றவாறு நெற்றியில் திருமண், விபூதி, சந்தனம் இட்டுக் கொண்டு பகவான் ஸந்நிதியில் ஒரு ஐந்து நிமிடமாவது த்யானம் செய்ய வேண்டும். பெண்கள் தங்கள் சௌகர்யத்திற்கு ஏற்றவாறு பூஜை செய்யவேண்டும்.

உலையில் அரிசி இடும் பொழுது, "என் அக்ஷயம் கிருஷ்ணனுக்கு" என்று சொல்லி அரிசியை வெங்கலப் பானையில் இடவேண்டும். பெருமாளுக்கு அன்னத்தை நைவேத்யம் செய்ய வேண்டும். பிறகு துளசிக்கு. சாப்பிடுமுன் காக்காய்க்குச் சிறிது அன்னத்தை அளிக்க வேண்டும். அதிதி இருந்தால் அவருடன்சேர்ந்து அன்னம் சாப்பிட வேண்டும். எதை சாப்பிடுவதாக இருந்தாலும் "க்ருஷ்ணார்ப்பணம்" என்று சொல்லிவிட்டே சாப்பிட வேண்டும்.

சாப்பிட்ட பிறகு தண்ணீரினுல் இலையைச் சுற்றி விட்டு சுண்டுவிரல் நுனியினுல் இலையின் வலதுபக்கத்தில் ஜலத்தை "அபுண்ய நிலயே உதகே தத்தம்" என்று சொல்லிக்கொண்டே விடவேண்டும். மூதாதையர்கள் பாப உலகத்தில் இருந்தாலும் அவர்களுக்கு இது.

பிறகு வெளியில் செல்லும் பொழுது "ராமரும் லக்ஷ்மணரும் வில்லுடன் நரஸிம்ம மூர்த்தியும் கிருஷ்ண பகவானும் கூட இருந்து

காப்பாற்ற வேண்டும்'' என்றும் ''மார்க்கபந்து நம் மார்க்கத்தில்கூட இருந்து காப்பாற்ற வேண்டும்'' என்றும் பகவானை தியானித்துக் கொண்டே செல்லலாம்.

சாயங்காலம் ஆபீஸிலிருந்து வந்தவுடன் கைகால் சுத்தி செய்து கொண்டு பெருமாள் ஸந்நிதியில் சிறிது நேரம் த்யானம் செய்ய வேண்டும். பிறகு ''ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரா நாம''த்தை பாராயணம் செய்யலாம். இந்த விஷ்ணு ஸஹஸ்ர நாமம் நம் சகல பாபத்தையும் போக்கவல்லது. நம்மை எல்லா பிணிகளிலிருந்தும் காப்பாற்றும். லக்ஷ்மி கடாட்சம் ஏற்படும்.

அஸ்தமிக்கும் சமயத்தில் கொல்லைப்புறக் கதவை சாத்திவிட்டு வாசற்கதவை திறந்து வைத்துவிட்டு பெருமாளுக்கு விளக்கு ஏற்ற வேண்டும். ஸ்ரீ மஹாலக்ஷ்மி வாசல் வழியாக வருகிறாள். பின்புறக் கதவு திறந்து வைத்தால் லக்ஷ்மி வெளியே போய்விடுவாள் என்று ஐதீகம். இவ்வேளையில் ஒருவரும் சாப்பிடக் கூடாது; நித்திரையும் செய்யக் கூடாது.

காலையில் ஹரியையும் மாலையில் சிவனையும் நினைத்தால் நாம் செய்த பாபங்கள் தொலையும். இரவில் படுத்தவுடன் கீழ்க்கண்ட ஸ்லோகங்களைச் சொல்லவும்;-

கருட தண்டம் கருட தண்டம்
கருட தண்டம்
கருடக் கொடி கருடக் கொடி
கருடக் கொடி

சுற்றுமுற்றும் கருடக் காவல்
சூழ வெளி கருடக் காவல்
ஆற்று வழி கருடக் காவல்
ஆலய வழி கருடக் காவல்
கருட தண்டம் கருட தண்டம்
கருட தண்டம்
கருடக் கொடி கருடக் கொடி
கருடக் கொடி

கருடபகவான் நம்மை எந்த பாவத்திலிருந்தும், ஆபத்திலிருந்தும் நம்மைக் காப்பாற்றுவார்.

மேற்சொன்ன தர்மங்களை நாம் தினந்தோறும் அநுஷ்டித்து வரவேண்டும். மூன்று காலமும் ஸந்தியா வந்தனம் செய்ய வேண்டும். காணுமல் (சூரியன் உதயமாகுமுன்) கோணுமல் (சூரியன் உச்சியில்இருக்கும்பொழுது) கண்டு (சூரியன் மலைவாயில் விழுமுன்) செய்ய வேண்டும். இத்தர்மங்கள் யாவரும் பின்பற்றும் சுலபமான வழியில் உள்ளன.

அவரவர் சக்திக்கு ஏற்றவாறு ஏழை எளியவர்களுக்குத் தானம் செய்ய வேண்டும். வருமானத்தில் ஒரு சிறிய பாகத்தையாவது கோவில் போன்ற நல்ல கார்யங்களுக்கு உண்டியலில் ஒதுக்கி வைத்துவிட வேண்டும்.

நம்முடைய கால்கள் கோவிலுக்குச் சென்று ப்ரதக்ஷிணம் செய்ய படைக்கப்பட்டுள்ளன. கைகள் பகவானை ஸேவிப்பதற்காக; காதுகள் பகவந்நாமாவை ஸ்மரிப்பதற்காக; காதுகள் பகவந் நாமாவை கேட்பதற்காக; கண்கள் பகவானின் திவ்யமங்கள ஸ்வரூபத்தைக் கண்டுகளிப்பதற்காகவும் ஏற்பட்டுள்ளன.

இக்கலியுகத்தில் இச்சுலபமான வழிகளை நாம் பின்பற்றினல் எம்பெருமானின் நித்ய கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தை எளிதில் அடையலாம்.

ஸர்வே ஜனு ஸுகினே பவந்து.



## ஆதிவ்யாதிஹர ஸ்ரீ ஆஞ்சநேயர்!

தஞ்சை மாவட்டம், குடந்தை (கும்பகோணம்) நன்னகரில், காவிரியாற்றின் கரையில்மைந்திருக்கிறது, ஒரு சிறிய கோயில்! அக்கோயிலில், ஆதிவ்யாதிஹர ஸ்ரீ ஆஞ்சநேயர் மிகவும் சக்தி வாய்ந்தவராம்! சிறிய உருவமே. ஆனுல் கீர்த்தியோ பெரியது! மனோவியாதி (ஆதி) உடல் வியாதி போன்றனவற்றைப் போக்கியருளி, விரைவில் நிவாரணமளிக்கிருர்! எண்ணற்ற மக்கள் பிரார்த்தனைகள் நிறைவேறி மகிழ்வதின் மூலம் அவருடைய மகிமை வெகுவாகப் பரவி வருகிறது.

அன்பர்கள் செய்யும் பிரார்த்தனை எப்படி? ஒரு தூய வெள்ளைத் துணியில் ஒரு (பட்டணம்) படி பச்சரிசி, ஒரு பிடி பருப்பு, ஒரு முழுத் தேங்காய், ஒரு ரூபாய் பணம் (நாணயம்) இவற்றுடன், தம் கோரிக்கைகளை ஒரு காகிதத்தில் எழுதி, அனைத்தையும் ஒன்ருகக் கட்டி, கோயிலுள் தொங்கவிட்டு விடுகிருர்கள்! ஆச்சரியப்படத்தக்க வகையில் அனுகூலம் கிடைத்து விடுகிறது! உடனேயே ஆலயத்துக்கு விரைந்து வந்துத் தங்கள் மூட்டைகளை இறக்கி, அவிழ்த்து ஸ்ரீ ஆஞ்சநேயருக்கு அபிஷேக, அலங்கார கைங்கர்யங்களை நடத்தி விடுகிருர்கள்!

இக்கோயிலை முழு பக்தி சிரத்தையுடனும் பூரண ஆசாரத்துடனும் பொறுப்பேற்றுப் பரிபாலித்துக்கொண்டு வருகிருர் ஸ்ரீ சங்கரன் என்ற இளைஞர் ஒருவர்! அவர் கூறுகிருர் :

''ஐந்து சனிக்கிழமைகள் தொடர்ந்து ஸ்ரீ ஆஞ்சநேயருக்கு வாழைப் பழத்தால் அஷ்டோத்திர ஸதநாம (108 நாமாக்கள்) அர்ச்சனை செய்து வருபவர்கள், அமோக வாழ்வடைவதுடன், அபரிமித புண்ணியமும் பெறுவர் என்பதில் ஐயமே சிறிதுமில்லை!''

அன்பர்கள் உடனுக்குடன் ஸ்ரீ ஆஞ்சநேயரின் அருளால் அனுகூலமடைவதால், 'பிரார்த்தனை 'மூட்டைகள்' வெகு நாட்கள் தொங்கிக் கொண்டிருப்பதில்லை, என்ருல் மிகையாகாது!

'மயூரப்ரியா'

# ★ கீதை காட்டும் நல்வழி ★

**சிரத்தாத்ரய விபாக யோகம்**
அத்தியாயம் — 17
பகுதி — 8

ராஜஸிக தவம் எத்தகையது?

ஸத்காரமான பூஜார்த்தம்
தபோ தம்பேன சைவ யத் |
க்ரியதே ததிஹ ப்ரோக்தம்
ராஜஸம் சல மத்ருவம் || (17-18)

'பெருமையும், பாராட்டுதலையும், போற்றுதலையும் முன்னிட்டு ஆடம்பரத்துடன் இங்கு எத்தவம் புரியப் படுகிறதோ தாற்காலிகமானதும் உறுதியற்றதுமான அந்தத் தவம் ராஜஸமானது என்று கூறப்படுகிறது'

புராணக் கதைகளில் பலவிதமான தவத்தைப் பற்றிய கதைகள் ஆங்காங்கு வருகின்றன. எல்லாத்தவமும் ஒரே மாதிரி அமைந்துவிடாது. தவம் செய்பவரின் மனப் பாங்கிற்கேற்ப அது சீரியதாகவோ அல்லது கீழான தாகவோ அமைகிறது. 'பிறப்பு இறப்பு கடந்த பெருநிலைக்குப் போக வேண்டும். விருப்பு வெறுப்பு அற்ற நிலையை அடைய வேண்டும்' என்ற உயர்ந்த குறிக்கோளுடன் செய்யப் படும் தவமே ஸாத்விக தவமாகும். ஆனால் மற்றும் சிலர் பிறர் தங்களைப் பாராட்ட வேண்டும், பிறர் தங்களைப் போற்ற வேண்டும் என்ற எண்ணத்தோடு தவத்தில் ஈடுபடுபவர். தவ சிரேஷ்டர் போல வேஷம் போடுவர். உலக மக்கள் தங்களை யோகி, ஞானி, முனிவர் என்றெல்லாம் புகழ்ந்து காலில் விழுந்து நமஸ்காரம் செய்வர், விருந்து கொடுத்து உபசரிப்பர். ஸன்மானமாகத் தக்ஷிணை கொடுப்பர் என்றெல்லாம் மனக்கோட்டைக் கட்டி இத்தகையோர் தவம் செய்வர். ஊரார் உழைப்பில் சுகஜீவனம் செய்ய வேண்டும் என்பதே இத்தகையவர்களது விருப்பம். இவ்வுலகில் பணம், பதவி எல்லாம் பெற வேண்டும் என்பதுதான் இத்தகையவர்களது மனதின் மேல்தளத்தில் இருக்கும் எண்ணமாகும்.

தாமஸ தவத்தைப் பற்றிய விளக்கம் அடுத்த சுலோகத்தில் வருகிறது.

மூடக்ராஹேணாத்மனோ
யத்பீடயா க்ரிதே தப: |
பரஸ்யோத்ஸாதனார்த்தம் வா
தத் தாமஸமுதாஹ்ருதம் || (17-19)

"மூடக் கொள்கையால் தன்னை துன்புறுத்தியோ அல்லது பிறரை அழித்தற் பொருட்டோ செய்யப் படும் தவம் தாமஸம் எனப்படுகிறது"

காரியம் ஒன்றாயினும் அதை அறிவுடன் ஆய்ந்து நல்ல நோக்கத்துடன் செய்தால் அது செய்பவனுக்கும் பிறருக்கும் நன்மை பயக்க வல்லதாகிறது. அதே காரியத்தை தீய நோக்கத்துடன் செய்தால் செய்பவனுக்கும், பிறருக்கும் தீமையைத் தரவல்லதாகிறது. இந்தப் பொது விதி, தவத்துக்கும் பொருந்தும். விவேகம் அற்றவர்கள் தவத்தின் உட்கருத்தை அறிவதில்லை. அவர்கள் தவம் செய்தால் அபரிதமான ஆற்றல் கிடைக்கும் என்று அறிந்து அதைப் பெற்று பிறரை அழிக்கப் பயன்படுத்துகிறார்கள். இத்தகையோர் செய்யும் தவமும் கொடூரமாக இருக்கும். புராணங்களில் பலவிதமான கொடூரத் தவம் பற்றிய தகவல்கள் காணப்படுகின்றன. சிலர் ஒற்றைக் காலில் நின்று தவம் புரிவர். சிலர் ஒரு சட்டியில் கந்தகத்தை போட்டு எரிய விட்டு அதைத் தலையில் வைத்துத் தவம் செய்வர். சிலர் இரும்புக் கொக்கிகளை தங்கள் உடலினுள் திணித்தும் வேல் போன்ற ஆணிகளை நாக்கினுள் குத்தியும் உடலை வருத்துவர்.

மற்றும் சிலர் கீழே தீயை மூட்டி மேலிருந்து கீழாகத் தலைகீழாகத் தொங்கிக் கொண்டு தீயிலிருந்து கிளம்பும் புகையை உட்கொள்வர். சிலர் கங்கை போன்ற ஐஸ் நீரில் இடுப்பளவு நின்று கொண்டு தவம் செய்வர். சிலர் நான்கு புறங்களிலும் தீயை மூட்டி அதன் நடுவே நின்று கொண்டு தலைக்கு மேலே தகிக்கும் வெயிலில் தவம் செய்வர். இதற்குப் பஞ்சாக்னி தபஸ் என்று பெயர். சிலர் வட்டமாக எரியும் தீக்கிடையே ஒற்றைக் காலில் நின்று தவம் செய்வர். மற்றும் சிலர் நடு இரவு வேளைகளில் மயானங்களுக்குச் சென்று பிணங்களின் மீதமர்ந்து தவம் செய்வர். இவையெல்லாம் தாமஸிக தவமாகும். இவற்றால் ஏதோ ஒரு சில சித்திகள் வேண்டுமானால் கிட்டலாமே ஒழிய ஆத்மஞானம் ஒருக்காலும் கிட்டாது.

புராணங்களில் அசுரர்கள் பிறரைத் துன்புறுத்தும் ஒரே நோக்கத்துடன் இத்தகைய கொடும் தவமுறைகளில் ஈடுபட்ட கதைகள் ஏராளமாக உள்ளன. ஆனால் பிறரது துன்பத்தில் இன்பம் கண்ட அவர்களது முடிவு எப்படி அமைந்தது என்பதும் நமக்குத் தெரிந்ததல்லவா? ஹிரண்யன், சூரபத்மன், இராவணன் போன்றோர் தங்களது கொடூர தவத்தால் எத்தனை எத்தனையோ சக்திகளைப் பெற்று விளங்கினாலும் இறுதியில் அவர்கள் இறைவனால் சம்ஹாரம் செய்யப்பட்டனர்.

பேராசிரியர் டி. கே. நாராயணன்
M.S.c., M.Phil.
ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

பிறரின் வெற்றி, அவர்தம் உழைப் பால் வந்த சிறப்பு என எண்ணுவது தூய சிந்தனை. மாறாக அவரது வெற்றியைக் காணச் சகிக்காது பொறாமை உணர்வு கொள்ளுவது தீய சிந்தனை. முன்னது ஒளி, பின்னது இருள். தூய சிந்தனையிலிருந்து பிறப் பது ஞானம். ஞானமாகிய இருள் உடனே நீங்கிவிடும். எனவேதான் மனதில் இருளே (ஏகாரத்தை கவ னிக்கவும்) தோன்றாதிருக்கச் செய்யு மாறு வேண்டுகிறார்.

மனதில் சலனமும் மதியில் இருளும் தோன்றாதிருந்தால் மௌன நிலை தானே வந்தெய்தும். ஆன்மீக வாழ் வுக்கு மிகவும் சிறப்பாக உதவுவது தியானம். தியானத்தில் உடல் சார் புள்ள ஆன்மீகமற்ற நிலைமைகளை அறவே விலக்கிவிட்டு, நமது தெய் வீகத் தன்மையை உணர்கிறோம். தியானத்தில் வெளிப்புறத்து உதவி ஒன்றையும் நாம் ஆதாரமாகக் கொள்ளவில்லை. இந்த ஒரு மனநிலை யில்'நிர்விகல்ப சமாதி' எளிதில் கை கூடும். எனவேதான் 'நின்மௌன நிலைவந்திட நீ அருள் செய்ய வேண் டும்' என வேண்டுகிறார்! செல்வம் எதற்காக? 'பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை' என்ற பழமொழி உலக இயல்பினைத் தெளிவாக விளக்கு கிறது. செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல் அல்லவா? உற்றாரும் சுற்றமும் உவகையுடன் வாழ வழி செய்ய வேண்டும் என்று விரும்பினால் வாரி வழங்க செல்வம் தேவை. செல் வம் இன்றி அறம் செய்ய விரும்பு வது எவ்வாறு சாத்தியமாகும்? இதனை நன்கு உணர்ந்ததாலேதான் செல்வத்தைக் கொடு என்று கேட் கிறார். தலைச்சுமை ஒரு குறிப்பிட்ட அளவுதான் தாங்க இயலும். என் னால் அதன் கனம் தாங்குமளவிற்கு அதாவது என் தேவைக்கேற்ப, செல் வத்தை வழங்கு எனக் கேட்கும் அவ ரது வேண்டுதல் இப்போது நமக்கு நியாயமாகவேபடுகிறது.

அடுத்து 'ஆயுள் நூறு வயது வேண்டும்' எனக் கேட்கிறார். நூறு வயதா? அது என்ன கணக்கு? சரித் திரத்தில் மக்களின் வாழ்க்கை முன் னேற்றம் இவற்றை, 'ஆறாம் நூற் றாண்டு, ஏழாம் நூற்றாண்டு' என்று நூறு ஆண்டுகள் சாதனையைக் கொண்டு ஒப்பிடப்படுகிறது. ஒரு வனை நினைக்கும்போது, அவன் நம் முன் வந்தால், 'உனக்கு ஆயுசு நூறு' என்கிறோம். எனவே நூறு வயது என்பது இங்கு அளவுகோலாகக் கொள்ளலாம். நூற்றாண்டு வாழ்ந்து சாதிப்பது என்ன? அறிவு நெறி ஒழுகி, வள்ளலாக வாழ்ந்து, திட்ட முடன் செயல்படும்போது, தன்னால் பயன் அடைந்தவர்களைக் கண்டு மகிழ வும் அவர்களைத் தன் வழியில் ஊக்கு வித்து, வழி நடத்தி, அவர்களைக் கொண்டு ஏனையோரையும், பாரினில் வாழ ஒரு சந்ததியை, சமுதாயத் தைத் தன் வாழ்நாளில் உருவாக்க வேண்டுமென்ற அவாதான் இவ் வாறு கேட்கத் தூண்டியது.

இதுவரை வாழ்க்கைக்கு வேண்டிய வற்றையெல்லாம் கேட்டுவிட்டார். அரிதரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது என்பதற்கொப்ப மானிட ராகப் பிறந்த தன் பயன் இறை வனைத் தொழுது ஏத்துவதுதான். அதுதானே தலையாய பணி. 'உன்னைப் பாடும் பணியே பணியாய் அருள் வாய்' என முருகப் பெருமானை வேண்டுகிறார் அருணகிரி நாதர். தன யன் விநாயகரிடம் வாழவரம் கேட்ட பாரதியார், அவர் தம்பி கந்தப் பெருமானையும் விட்டாரில்லை! அவரி டம் இப்படிக் கூறுகிறார்:

"தோகைமேல் உலவும் கந்தன்
சுடர்க் கரத்திருக்கும்
வெற்றி வாகையே சுமக்கும் வேலை
வணங்குவது எமக்கு வேலை."

இளையவரிடம் எதுவும் கேட்க வில்லை இந்தப் பாரதியார். தன் பணி தன் வேலை என்பதனை மட்டும் தெரிவித்துக் கொள்ளுகிறார்.

முருகனுடன் வேலும் மயிலும் இணைந்தே இருக்கும். பாரதியாரும் இதனையொட்டி, கந்தப்பெருமானின் திருக்கோலத்தை அழகாக வர்ணிக் கிறார். தோகை கொண்ட மயில் மேல் உலவும் கந்தன். அவன் கரம் சுடர்க்கரம். கந்தனே சுடர்வடிவாக பிறந்தவன்தானே! அவன் சுடர்க் கரத்தில் இருக்கும் வேல் சாதாரண வேல் அல்ல. வெற்றி வாகையே (ஏகாரத்தைக் கவனியுங்கள்) சுமக் கும் வேல். தோல்வியைச் சந்தித் ததே இல்லை. 'அந்த வேலை வணங்கு வதே என் வேலை' என்கிறார். தன் பணி, தன் வேலை என்ன என்பதனை எளிய கருத்துக்களால் தெளிவாக, அழுத்தமாக இச்சிறுபாடல் மூலம் உணர்த்தி விடுகிறார் மகாகவி பாரதி யார்.

இவ்விரு பாடல்கள் மட்டும் போதுமே இரு கண்களாக இறை வனை வழிபட.ஒரு குருட்டுப் பிச்சைக் காரனிடம் 'உனக்கு வேண்டிய, ஒரே ஒரு வரம் மட்டும் கேள். தரு கிறேன்' என்ற கடவுளிடம், "ஆண் டவனே, என் ஏழடுக்கு மாளிகையின் உச்சியில், என் மனைவி தன்பேரனுக்கு தங்கக்கிண்ணத்தில் நிலா ஒளியில் பால்சோறு ஊட்டுவதை என் இரு கண்களாலும் கண்டு மகிழ வரம் கொடு" என்ற கதைமாதிரி அமைந்து விடுகிறது பாரதியார் வரம் கேட்ட பாடல். அவரது தோத்திரப்பாடல் கள் அனைத்துக்கும் சிகரம் வைத்தாற் போல் அமைந்து விடுகின்றன இவ் விரு பாடல்களும்.

இவற்றை நாமும், தினமும் பாடி பயன் பெறலாமே.



(8-ம் பக்கத் தொடர்ச்சி)

வேண்டுமென வகுத்தான். ஆதலின் உலகின்கண் உழவராக வேலை செய்பவர் யாவரும் ஆதிபகவன் வம்சத்தினர், அவன் கோலின வழியில் செல்பவர். உழவனைப் பழிப்பது ஆதி பகவனைப் பழிப்பதாகும். அவனைப் பூசித்தல் இறைவனைப் பூசித்தலாகும். பகவானுக்குப் பிரதிநிதியாகயிருந்து உலகைக் காப்பவன் உழவன்.

“ அலகிலா மறை விளங்கு மந்தண
ராகுதி விளங்கும்
பலகலையாந்தொகை விளங்கும்
பாவலர்தம் பாவிளங்கும்
மலர்குலாந்திரு விளங்கு மழை
விளங்கு மனு விளங்கும்
உலகெலாமொளி விளங்கு-
முழவருழு முழவாலே”

என்னும் பாட்டில் (ஏரெழுபது) நம் கவிச்சக்ரவர்த்தி இக்கருத்தையே வெளியிடுகிறார்.

ஆதிபகவான் உழவுமட்டும் செய்யவில்லை; உழுது, தான் விளைவித்த தானியத்தில் வாரமும் கொடுத்து வந்தான். மொத்த மகசூலில் ஒரு பகுதியைப் பிரித்துத்தானே “வார” மாகக் கொடுக்கவேண்டும்? “பகவன்” (பகுப்பவன்—பங்கிடுப்வன்) என்று உழவனை வழங்குவதற்கு இதுவும் காரணமாகும். இவ்விஷயத்தில் ஸம்ஸ்க்ருதமும் தமிழும் “பகவன்” என்னும் சொல்லுக்குப் “பகுப்பவன்” என்றே பொருள் விளங்குமாறு மாறு அமைத்துள்ளன.

“ विहव्यमग्निरानुषग्भगो न वारमृण्वति ”

விஹவ்யமக்நிரானுஷக்பகோ ந
வாரம்ருண்வதி

(ருக்வேதம் 5-வது மண்டலம், 16-வது ஸூக்தம், 2-வது ருக்.)

“அக்நிதேவன் யாகத்திலுள்ள ஹவிஸ்ஸுகளை தேவர்களுக்குப் பிரித்துக் கொடுக்கிறான். அவன் (மனிதர்களுக்கு) “பகன்” (भग:) போல் வாரம் கொடுக்கிறான்” என்பது இதன் கருத்து. இந்த வேதவாக்கியத்தில் “வாரம்” என்னும் சொல் அப்படியே காணப்படுகின்றது. அதற்கு“விரும்பப்படுவது” என்று பொருள் விளக்கப்பட்டுள்ளது பாஷ்யங்களில்.‘பகன்’ என்றும் பகவனுடைய சேர்க்கையாலும், விளைந்த மகசூலின் ஒருபகுதியும் “விரும்பப்படும் பொருளாகவே” இருப்பதனாலும், “வாரம்” என்னும் இச்சொல் உழவர் கொடுக்கும் “வார”த்தையே குறிப்பிடுவதாகக் கொள்வதில் மிக்க பொருத்தமுண்டு.

“ प्रातर्जितं भगमुग्रं हुवेम वयं पुत्रमदितेः ”

ப்ரார்தஜிதம் பகமுக்ரம்ஹுவேம
வயம் புத்ரமதிதே :

(ருக்வேதம் 7-42-2)

என்னும் வேதமந்திரம் பக(வ)னை (உழவனை) “அதிதியின் மகன்” என்று கூறுகின்றது. इयं वा अदिति(இயம் வா அதிதி ;) (க்ருஷ்ண யஜுர் வேதம் தைத்-ஸம்ஹிதை 2-2, 6-1) என்னும் வேதவாக்கியம் “இந்த பூமியே அதிதி” என்கிறது. உழவனைப் “பூமியின் மகன்” என்று வேதம் புகழ்கின்றது. இம்மாநிலத்தில் பல்வேறு தொழில்களில் ஈடுபட்டிருக்கும் மக்கள் யாவரும் இம்மண்ணில் தோன்றி வளர்ந்து மண்ணிலேயே கலந்து விடுபவர்கள்தான். ஆனால் இப்பூமி உழவனுக்குத்தான் நேராகத் தனது ஸாரத்தை அருளுகின்றது. அவன் மூலமாகவே பிறர் அதைப்பெற முடியும். கன்றுக்காகப் பசுவின் மடியில் சுரக்கும் பாலை மற்றவர்களும் பருகுவது போலவே இதுவும். கன்று இல்லாத பசுவினிடம் பால் கிடைக்காது. அதுபோலவே பூமியின் குழந்தையாகிய உழவன் இல்லாவிடில் பூமி ஒரு பயனையும் தராது. இக்கருத்தை கீழ் வேதவாக்கியங்கள் நன்கு விளக்குகின்றன.

“ भगो विभक्ता शवसावसागमत् ”

பகோ விபக்தா சவஸாகஸாகமத்
(ருக்வேதம் 5-46-6)

“பிரித்துக் கொடுப்பவனாகிய “பகன்” உணவுப் பொருட்களுடன் வந்து காப்பாற்றட்டும் என்பது இதன் பொருள். “மலைகளும் ஆறுகளும் நம்மைக் காப்பாற்றட்டும்” என்னும் கருத்து இதற்கு முன் பகுதியில் உள்ளது. மலைகளிலிருந்து ஆறுகள் தோன்றிப் பெருகி வயல்களில் பாய்வதும், உழவன் உணவுப் பொருள்களை உற்பத்தி செய்து, அதைப் பிரித்துக் கொடுத்து உலகைக் காப்பதும் இந்த மந்திரத்தில் நன்கு விளக்கப்படுகின்றன.

“ भगश्च दातु वार्यम् ”

பகச்ச தாது வார்யம்
(ருக்வேதம் 7-16-11)

என்னும் மந்திரத்திலும் “பகனும் நமக்கு வார்யத்தை (விரும்பக் கூடியதை = வாரத்தை)க் கொடுக்கட்டும்” என்கிற பொருள் புலப்படுகின்றது. वृङ् = संभक्तौ ” என்னும் தாது (धातु)வினின்றும் (பாணினீய தாது பாடம்.) தோன்றிய“வாரம்” என்னும் சொல், ருக்வேதத்திலேயே, பகனால் (உழவனால்)பிரித்துக் கொடுக்கப்படுவதாகிய மகசூலின் பகுதியைக் குறிப்பதைக் கண்டோம். இன்றும் நம் நாட்டில் உழவன் “வாரம்” கொடுப்பது வழக்கத்திலுள்ளது.

உழவனுக்கு, காற்று—மழை—மலைகள் — ஆறுகள் — இவற்றைப் போல், உழவுக்கு மாடுகளும், குதிரைகளும் வேலை செய்வதற்கு ஆள் பலமும் வேண்டுமல்லவா? கீழே தரப்படும் மந்திரங்களைக் கவனிக்க வேண்டும்.

“ भगो गोषु प्रविष्टो यः ”

பகோ கோஷுப்ரவிஷ்டோ ய:

(அதர்வண வேதம் ஸம்ஹிதை 14-2-55)

“பகன் (பகவன் = உழவன்) பசுக்களின் நடுவில் இருப்பான்” என்பது இதன் கருத்து.

“ भगो वा गोभिरर्यमेमनज्यात् ”

பகோ வா கோபிரர்ய மேமநஜ்யாத்
(ருக்வேதம் 10-31-4)

"கோக்களுடன் (கூடிய) பகனும் "அர்யமா" எனப்படும் தேவனும் இந்தப் பயனைக் கொடுக்கட்டும் என்பது இதன் பொருள்.

**" भग प्रणो जनय गोभिरश्वैः**
**भग प्र नृभिर्नृवन्तस्स्याम "**

பகப்ரணோ ஜனய கோபிரச்வை:
பகப்ர ந்ருபிர்ந்ருவந்தஸ்ஸ்யாம

*(ருக்வேதம் 7-41-3; அதர்வண வேதம் 3-16-3; சுக்ல யஜுர்வேதம்-வாஜஸநேய ஸம்ஹிதா 34-36; க்ருஷ்ண யஜுர்வேதம் தைத்திரீய ப்ராம்மணம் 2-5-5-2; 8-9-8.)*

"பகனே! (भग) நாங்கள் ஏராளமான மாடு, குதிரைகளுள்ளவர்களாகுமாறு அருளவேணும். பகனே!(भग) நல்ல திறமைசாலிகளான மனிதர்களால் ஆள் பலமுள்ளவர்களாக நாங்கள் விளங்குமாறு அருளவேணும்" என்பது இதன் பொருள். இதே வாக்கியம் பல வேதங்களிலும் இதே கருத்துடன் காணப்படுவதைக் கீழே கொடுத்திருக்கும் விவரங்களிலிருந்து அறியலாம். **भगेन मा संशपेन** (அதர்வணவேதம் 6-129-1.) (பகேந மாஸம்சபேன) என்னும் வாக்கியம் "ஸம்சபன்" என்று பகனைக் கூறுகிறது. எருதுகள்-குதிரைகள் முதலியவற்றின் குளம்புகள் இவனிடம் ஒன்று சேர்ந்திருக்கும்என்பது இதன் பொருள். இவ்வளவும் அமையப் பெற்ற பகவனுக்கு (உழவனுக்கு) உடல் வலிமை நிகரற்றதாயிருத்தல் மிக மிக முக்கியமல்லவா? அதை ஒரு வேதவாக்கியம் விளக்குகிறது:—

**" भगस्य तन्वो बले "**

பகஸ்ய தந்வோ பலே
*(அதர்வண வேதம் 2-29-1)*

"பகனுடைய உடலின் வலிமை (எனக்கு உண்டாகுக)"என்பதுஇதன் கருத்து. ""மன்மதனுடைய அழகு எனக்கு உண்டாகட்டும். குபேரனுடைய பணம் எனக்கு உண்டாகட்டும்" என்பதுபோல் வலிமையை விரும்பும் போது அதில் சிறந்தவனாகிய பகனைச் சொல்லி அதை வேண்டுகிறது வேதம்.

பகன் (பகவன்) ஏர் உழும் வகையை ஒரு வேத வாக்கியம் சுவை மிக்க வருணனையால் காட்டுகின்றது;

**" यो अंधो यः पुनस्सरो भगो वृक्षेष्वाहितः "**

யோ அந்தோ ய: புனஸ்ஸரோ பகோ
வ்ருக்ஷேஷ்வாஹித

*(அதர்வண வேதம் 6-129-3)*

"பகன் குருடன். அதனால் சென்ற வழியிலேயே திரும்பித் திரும்பி வந்து கொண்டிருப்பான். அவன் மரங்களை நம்பிப் பிழைப்பவன்" (அல்லது-மரங்களில் முட்டிக்கொள்வன்) என்பது இதன் கருத்து. பின்மாலை வேளையில் மாடுகளை ஓட்டிக் கொண்டு உழுவதற்காகச் செல்லும் உழவன், இருளில் குருடனைப் போல மெதுவாகத் தரையைத் தடவிக்கொண்டே வழியை ஊகித்தறிந்து கொண்டு சொல்வான். அவ்வாறு செல்லும் போது எதிரில் ஏதாவது மரங்கள் அல்லது கட்டைகள் (நிறுத்தி வைக்கப்பட்டவை)தோன்றினால் அவற்றையறியாது அவற்றில் மோதிக் கொள்வான். (அல்லது கலப்பை-ஏர்க்கால் ஏற்றம்-மடல்கள் தழை உரம்-வீட்டுக் கூரைக்கு ஓலைகள் இது போன்ற பல உபயோகங்களுக்காக மரங்களை நம்பி வாழ்வான்). அவன் ஒவ்வொரு வளைப்பிலும் பலதரம் உழும் போது, போனவழியிலேயே மீண்டும் மீண்டும் திரும்பி வருவான். இவற்றையெல்லாம் உற்று நோக்குங்கால் அவனைக் குருடனென்னாமல் வேறென்னவென்பது?

"பகன் (பகவன்) எல்லோருக்கும் தலைமை தாங்கி, முன்னே செல்பவன்" என்று கோஷிக்கிறது வேதம்.

**" भगो राजा पुर एतु प्रजानन् "**

பகோ ராஜா புர எது ப்ரஜாநநன்
*(அதர்வண வேதம் 14-1-59)*

"அரசனாகிய பகன்முன்னே அறிந்து கொண்டு செல்லட்டும்" என்பது இதன் கருத்து. '**भग प्रणेतः**" (பக ப்ரணேத:) (ருக்வேதம் 7-41-3; அதர்வணவேதம். 3-16-3; சுக்ல யஜுர்வேதம் வாஜஸநேய ஸம்ஹிதை 34-36; க்ருஷ்ண யஜுர்வேதம், ப்ரா 2-5-5-2, 8-9-8.) "எங்களைச் சிறந்த முறையில் அழைத்துச் செல்பவனே!" என்று பகனைச் சொல்லுகிறது இவ்வாக்கியம். இதுபோன்ற பல வாக்கியங்கள் "பகன் முன்னே அழைத்துச் செல்லும் ஆற்றல் வாய்ந்தவன்" எனப்புகழ்கின்றன. உணவைக் கொடுத்து உலகைக் காக்கும் பகவன் தான் உண்மையில் எல்லோருக்கும் தலைமை தாங்கி அழைத்துச் செல்லக் கூடியவன். மற்றவர்களுக்குப் போல் உழவர்களுக்குள்ளும் முன்னே ஏர் ஓட்டிச் செல்பவன்தான் தலைவனாகக் கருதப்படுவான். அவனுடைய மாடுகளும் பலமுள்ளவையாகவே இருக்கும். உழவர்கள் பலர் தங்களுடைய மாடுகளுடன் ஏர் உழுவதற்கு நிலத்தில் குழுமியிருக்கும் போது முன்னேர் உழுவதில் சர்ச்சை ஏற்படும். யாரும் தன் மாடுகளை முன்னேரில் கட்டி ஓட்ட எளிதில் இணங்க மாட்டார்கள். அதில் கஷ்டம் அதிகமாக இருப்பதே அதற்குக் காரணம். தனக்கு முன்னே வேறு யாரும் செல்லாத நிலையில் தானே வழிகாட்டியாகச் செல்லவேண்டியிருக்கிறதல்லவா? அதுபோலவே, ஏர் உழும் பழக்கமில்லாத மாடுகளையும் இளைத்த மாடுகளையும் பின்னேரில் கட்டி ஓட்டுவது வழக்கம். முன்னே போய்க் கொண்டிருக்கும் மாடுகளின் வழியில் பின்னால் தொடர்ந்து செல்வதில் மாடுகளுக்கு அவ்வளவு கஷ்டமிருக்காது. மாடுகளுக்குப் போலவே முதன் முதலில் ஓட்டிச் செல்லும் உழவனுக்கும் கஷ்டம் அதிகம். உழவில் ஏற்படக்கூடிய தவறுகளை கூர்ந்து கவனித்து நடத்த வேண்டிய பொறுப்பு அவனைச் சார்ந்தது. உழவர்கள் உழும் போது "என்னேரு(று) முன்னே(று)" என்று பெருமிதத்துடன் பாடிக்கொண்டே உழுவதை இன்றும் காணலாம். பல தெய்வங்களையும் அவற்றின் சிறப்பான பண்புகளையும் கூறிப்புகழும் வேதமும் தெய்விக உழவனாகிய பக(வ)னையே "முன்னே செல்பவன்" எனப் புகழுகின்றது. அது இன்றளவும் தொடர்ந்து வழக்கத்தில் வந்திருத்தல் பொருந்துமல்லவா?

(தொடரும்)

(4-ம் பக்கம் தொடர்ச்சி)

ஸ்ரீவேங்கடேஸ்வரா அன்னமாச்சார்யா இசைவிழா :

கி. பி. 15-ம் நூற்றாண்டில் வாழ்ந்தவரும், திருவேங்கடவனின்மீது சுமார் 32,000 கீர்த்தனைகள் புனைந்தவருமான தாள்ளபாக்க ஸ்ரீ அன்னமாச்சார்யாவின் 578-வது பிறந்த நாள் விழாவினை முன்னிட்டு தி. தி. தே. அன்னமாச்சார்யா திட்டத்தின் ஆதரவில் "ஸ்ரீவேங்கடேஸ்வரா அன்னமாச்சார்யா இசை விழாவினை" 23-5-86 முதல் 31-5-86 வரை ஒன்பது நாட்களுக்குத் திருப்பதியில் வெகு விமர்சையாக தேவஸ்தான மேலாண்மை கொண்டாடியது. 23-5-86 அன்று காலை ஸ்ரீவேங்கடேஸ்வரர் மற்றும் ஸ்ரீ அன்னமாச்சார்யா திருவுருவங்கள் திருவீதி வலமாக கொண்டு செல்லப்பட்டன. பின்னர் ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் இவ்விழாவினைத் துவக்கிடும் வகையில் 'சங்கீர்த்தனை பூஜை' நிகழ்ச்சி தி. தி. தே. ஆஸ்தான வித்வானுகிய திரு. நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் குழுவினரின் நாதஸ்வர இசையுடன் துவங்கியது.

அன்று மாலை,ஆந்திர மாநில முதல்வர் திரு. என். டி. ராமாராவ் அவர்களால் 'இசை விழா' துவக்கி வைக்கப்பட்டது. இறை வணக்கத்தைத் தொடர்ந்து, தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. எஸ். லக்ஷ்மி நாராயண அவர்கள் விழாக் கூட்டத்தினரை வரவேற்றுப் பேசுகையில், அன்னமய்யா பாடல்களுக்கு எவ்வகையில் ஆழ்வார்களின் பாடல்கள் உதவியாக அமைந்தன என்பதையும், புரந்தர தாஸர் கருத்துக்களும் அன்னமய்யா கருத்துக்களும் எவ்வகையில் ஒத்து உள்ளன என்பதையும் விவரித்துப் பேசினுர். பின்னர் ஸ்ரீ அன்னமாச்சார்யா திட்ட அலுவர் திரு. காமி செட்டி ஸ்ரீநிவாசலு அவர்கள் தனது ஆண்டறிக்கையில் அன்னமய்யாவைப் பற்றி விளக்கியும் அவர் பிறந்த இடமான கடப்பை மாவட்டம் தாள்ளபாக்க கிராமத்தில் தியான மந்திரம் ஒன்றும், வருடா வருடம் பிரம்மோற்சவம் ஒன்றும் மேற்கொள்ள இருப்பதைப் பற்றியும் விளக்கிப் பேசினுர். இவ்விழாவிற்குத் தலைமை வகித்து உரையாற்றிய ஆந்திர மாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு. என். எதிராஜராவ் அவர்கள் அன்னமய்யாவை பதிமூன்ருவது ஆழ்வாராக சிறப்பித்து, அவர் தம் பாடற்சிறப்பினை விளக்கிப் பேசினுர். பின்னர் இவ்விழாவிற்குச் சிறப்பு விருந்தினராக வருகை புரிந்திருந்த குவாலியரைச் சார்ந்த திருமதி. ராஜ்மாதா விஜயராஜ்யே சிந்தியா அவர்கள் தி. தி. தே. பதிவு செய்த, வேங்கடவரின்மீது அன்னமாச்சார்யா மற்றும் பல கவிஞர்கள் இயற்றிய பாடல்கள் அடங்கிய தெலுங்கு பதிவு நாடாக்கள், புரந்தர தாஸர் மற்றும் பல தாஸர்கள் பாடிய கன்னட பதிவு நாடாக்கள், ஆழ்வார்கள் பாடிய தமிழ் பதிவு நாடாக்கள் ஆகிய வற்றை வெளியிட்டு உரையாற்றுகையில், பக்தி மொழியைக் கடந்தது என்றும், வடக்கையும் தெற்கையும் இணைக்கும் சக்தி இசைக்கு ஒன்று தான் உண்டு என்றுகூறி இதுபோன்ற இசை விழாக்கள் பெருமளவில் நடக்க வேண்டியதன் அவசியத்தைக் குறிப்பிட்டு, இந்நோக்கத்தை மனதிற் கொண்டு செயற்படும் ஆந்திர முதல்வரைப் பாராட்டிப் பேசினுர்.

அடுத்து இசை விழாவினை துவக்கி வைத்துப் பேசிய ஆந்திர முதல்வர் அவர்கள் தி. தி. தே. பிரசுரித்த ஆங்கிலம் மற்றும் தெலுங்கு சமய நூல்களை வெளியிட்டார். பின்னர் தமது திறப்புரையில் ராயல சீமையில் பிறந்து பக்தி இயக்கத்திற்கு ஒரு புத்துணர்ச்சி அளித்த அன்னமய்யா, போத்தன, சதாசிவ பிரம்மேந்திரர் போன்ரேரின் சமயத் தொண்டினைக் குறிபிட்டு, இராமரும் கிருஷ்ணரும் மானிட பிறவிக்கு உதாரண புருஷர்களாக இருந்ததையும் அவர்களைப் போற்றி பாக்கள் புனைந்த பக்தர்களும் ஜாதிகளுக்குள் வேற்றுமைக் காட்டவில்லை என்பதையும் விளக்கிப் பேசினுர். அன்னமய்யாவின் தூய பக்தியினை அவர்தம் பாடல்களில் கண்டு, நம்பிக்கையுடன், சீரிய சிந்தனையுடன் செயலாற்றுவதே இது போன்ற பக்தர்களுக்கு நாம் செலுத்தும் நன்றிக்கடன் என்று கூறினுர். பின்னர் அன்னமய்யா சந்ததியினரை தி. தி. தே. சார்பில் பொன்னுடைப் போர்த்திக் கௌரவித்தார். அடுத்து பதிவு நாடாக்களில் பல பக்திப் பாக்களைப் பாடிய ராஜ்குமார் பாரதி உள்ளிட்ட பல்வேறு கலைஞர்களை அன்னமாச்சார்யா நினைவுப் பதக்கங்களைப் பரிசளித்துக் கௌரவித்தார்.

இறுதியில் தி. தி. தே. பாதுகாப்பு அலுவலர் திரு. கே. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் நன்றி நவின்ருர். இவ்விழாவில் ஆந்திர மாநில கல்வி அமைச்சர், மற்றும் ஆந்திர பாராளுமன்ற உறுப்பினர் திரு. உபேந்திரா ஆகியோரும் பங்கேற்றனர்.

அன்று இரவு ஸ்ரீஅன்னமாச்சார்யா திட்டத்தைச் சார்ந்த குழுவினரின் 'ஹரி அவதாரம்' எனும் இசை நிகழ்ச்சியும், அதனைத் தொடர்ந்து தி. தி. தே. ஆஸ்தான வித்துவான் திரு. நேதுநூரி கிருஷ்ணமூர்த்தி குழுவினரின் இன்னிசைக் கச்சேரியும் நடைபெற்றது.

24-5-86 முதல் 31-5-86 வரை எட்டு நாட்களின் காலை நேரங்களின் போது பல்வேறு முக்கிய பிரமுகர்களின் தலைமையில் டாக்டர். வேட்டூரி ஆனந்தமூர்த்தி, திருமதி. சுந்தர ராமன், திரு. பி. கே. ராஜகோபால ஐயர், ஸ்ரீ எஸ்.வி. புஜங்கராய சர்மா, டாக்டர். சீதா, திரு. வை. ஸ்ரீநிவாச ராவ், திருமதி பத்மாமூர்த்தி, திரு. கல்லூரி வீரபத்ர சாஸ்திரி, திரு. அர்ர கிருஷ்ணமூர்த்தி,திரு.ஆருத்ரா, திரு. எஸ். ஆர். ஜானகி ராமன், திரு. ஜி. ராமசுப்பசர்மா, திரு. துவா

(48-ம் பக்கம் பார்க்க)

# இசையும் இளைஞர்களும்

சென்ற வருடம் திருமலை திருப்பதி தேவஸ்தானம் மிகச் சிறப்பான முறையில் "ஸ்ரீ வேங்கடேஸ்வரா அண்ணம்மாச்சார்யா இசை விழா" வினை நடத்தியதை வாசகர்களும், இசைப் பிரியர்களும் மறந்திருக்க மாட்டார்கள். ஆனால் அந்த இசை விழாவில் என் மனதை நெருடிய ஒரே யொரு விஷயம் என்னவென்றால், அவ்வளவு புகழ் பெற்ற கலைஞர்கள் அளித்த இசை நிகழ்ச்சிகளைக் கேட்க வந்த இளைஞர்களின் எண்ணிக்கை மிகக் குறைவு என்பதுதான்.

இன்றைய இளைஞர்கள், நமது பாரம்பரிய இசையை ஏன் விரும்பிக் கேட்டு ரசிப்பதில்லை என்ற கேள்வி என்னுள்ளே மீண்டும் மீண்டும் எழுந்து கொண்டிருந்தது. இவ்வருடம் மே மாதத்தில் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தினர் மீண்டும் "ஸ்ரீ வேங்கடேஸ்வரா அண்ணம்மாச்சார்யா இசை விழாவினை" நடத்தினர். சென்ற வருடம் 5 நாட்கள் நடந்த விழா இவ்வருடம் 9 நாட்கள் நடைபெற்றது.

சென்ற வருடத்திலிருந்து என்னுள் எதிரொலித்துக் கொண்டிருந்த கேள்விகளை இவ்விழாவில் இசை நிகழ்ச்சிகளை அளிக்க வந்த பல கலைஞர்களிடமே கேட்க முடிவு செய்தேன். இளைஞர்கள் நமது பாரம்பர்யமான, சாஸ்திரீய இசையில் அதிக ஈடுபாடு கொள்ளாதது ஏன்? இதற்கு யார் பொறுப்பு? இந்நிலைக்கு என்ன காரணம்? எதிர் காலத்தில் சாஸ்திரீய இசையை இளைஞர்களும் ரசிக்கும்படி செய்ய முடியுமா? என்ற எனது பல கேள்விகளுக்குப் பிரபல கலைஞர்களின் பதில்கள் இதோ.

திரு. தி. ஸ்ரீ. திருவேங்கடம்-திருப்பதி.

**திரு. நாமகிரிப்பேட்டை கே. கிருஷ்ணன் (நாதஸ்வரம்)**

நல்ல சாஸ்திரீயமான இசையை இளைஞர்கள் மட்டுமின்றிப் பொது மக்கள் பலரும் கூட அதிகமாக விரும்பிக் கேட்காதது அவர்கள் குறையில்லை. இதற்கு முழுமுதற் காரணம் வாய்ப்பின்மைதான்.

மிகச் சாதாரணமான வருமானமுள்ளவர்கள்கூட நம் நாட்டில் நிறைய திரைப்படங்களைப் பார்க்கும் வாய்ப்புள்ளது. ஆனால் எவ்வளவோ லட்சம் பேர் தமது வாழ்நாள் முழுவதும் ஒரேயொரு நல்ல சாஸ்திரீயமான இசைக்கச்சேரியைக் கூட கேட்கும் வாய்ப்பில்லாமலேயே போகிறது என்பது மிகவும் வருந்தத்தக்க உண்மை.

ஒருவன் லட்டு எப்படியிருக்கும் என்று தெரியாமலேயே லட்டு பிடிக்காது என்று கூறுவதைப் போல சாஸ்திரீய இசையைப் பற்றி தெரியாமலேயே அது தனக்குப் பிடிக்காது என்று கூறும் நிலையில்தான் இன்றைய இளைஞர்களும், பொதுமக்களும் இருக்கிறார்கள்.

**திரு. அப்துல் ஜாபர் அலிகான் (கிதார்)**

பொதுமக்களும், குறிப்பாக இளைஞர்களும் நமது சாஸ்திரீய இசையை அவ்வளவாக விரும்பாதற்கு முக்கியமான காரணம் அவர்களது பொருளாதார நிலைமைதான். ஒரு ரூபாய்க்கும் குறைந்த செலவில் இன்றுகூட ஒருவன் சினிமா பார்க்க முடியும். ஆனால் அதிகம் பணம் செலவழித்து அவர்களால் எப்படி இசைக் கச்சேரிகளை கேட்க முடியும்.

வானொலி, தொலைக்காட்சி முதலிய சாதனங்கள் நமது இசையை பாமரர்களிடமும் பரப்பும் அரிய முயற்சியில் இன்னும் அதிக கவனம் செலுத்த வேண்டும். திருமலை திருப்பதி தேவஸ்தானம் போன்ற நிறுவனங்கள் இப்போது நடைபெறும் விழாக்களை மேலும் பல நடத்தி பக்தியோடு இசையையும் வளர்க்க முன்வர வேண்டும்.

**திரு. கே. ஜே. யேசுதாஸ் (வாய்ப்பாட்டு)**

இன்றைய இளைஞர்கள் சாஸ்திரீய இசையை ரசிப்பதில்லை என்று அவர்களைக் குறைகூற நம் நாட்டில் யாருக்கும் அருகதை இல்லை. ஏனென்றால் குழந்தைப் பருவத்திலிருந்து இளமைக்காலம் வரை தினம் தினம் புத்தக மூட்டையை சுமந்துகொண்டு எப்போதோ அப்பா அம்மா படித்த பாடங்களை அர்த்தம் புரியாமலேயே மனப் பாடம் செய்து கொண்டும் எதற்கும் உதவாத பட்டம் பெற்று, அதைக் கையில் ஏந்தியபடி வேலைக்கு அலைந்து கொண்டும் அல்லது ஏழ்மையில் வாடும் சராசரி இந்திய இளைஞன் இசையை ரசிக்கும் வாழ்க்கையா வாழ்கிறான்.

தப்பித் தவறி ஒரு சில இளைஞர்களிடம் இயற்கையாகவே உள்ள ரசனைகள் கூட அவர்கள் பெற்றோர்கள் தரும் "தண்டச்சோறு", "உருப்படாதவன்" முதலிய பட்டங்களைக் கண்டு மறைந்து விடுகின்றன. நம் நாட்டில் இன்று ஒரு அரசாங்க அலுவலக பியூனுக்குள்ள மதிப்பும் செல்வாக்கும் கூட பல இசைக் கலைஞர்களுக்கு இல்லை என்பது எவ்வளவு அப்பட்டமான உண்மை. இந்நிலையில் இசை மட்டுமின்றி எந்தக் கலையும் வளர்வது சுலபமில்லை.

**திரு. பீம்ஸேன் ஜோஷி (வாய்ப்பாட்டு)**

இளைஞர்களை பாரம்பர்ய இசையை கேட்க வைத்து ரசிக்க வைப்பது அவ்வளவு எளிதான வேலை இல்லைதான். ஆனால் இதிலுள்ள ஒரேயொரு பிரச்னை "கிளாஸிகல்" இசையை இளைஞர்களை கவரும் வகையில் "பிரஸண்ட்" செய்ய வேண்டும் என்பதுதான்.

முடிந்த வரையில் நமது திரைப் படங்களில் இடம் பெறும் பாடல் களை கிளாஸிகலாக இசையமைப் பதுதான் சிறந்த வழி. ஆனுல் இதற் காக எல்லா சினிமாக்களும் "சங்கரா பரணம்" போலத்தான் இருக்கவேண் டும் என்றில்லே. இன்றைய இளைஞர் களை மிக எளிதில் கவரக்கூடியது சினிமாதான். அதனுல் இதன் மூல மாக இசை மிகச் சுலபமாக பிரபல மடையும் என்பது உலகறிந்த உண்மை.

திருமதி. வாணி ஜெயராம் (வாய்ப்பாட்டு)

இளைஞர்களை மட்டுமில்லே, எந்த வயதுள்ள ரசிகர்களையானுலும் சரி அவர்களை பாட்டுக்குத் தைத்தாளம் போடச் சொல்லி, கைத்தட்ட வைப் பதோ இல்லே பாட ஆரம்பித்தவுட னேயே கூச்சல் போட்டு பாடுவதை நிறுத்தி வைப்பதோ கலேஞனின் புல மையும் அவனது திறமையும்தான் காரணம்.

இப்போதெல்லாம் பல கலேஞர் கள் கச்சேரி செய்வதை ஒரு பொருட் டாகவே நினைப்பதில்லே. அதற்காக ஒட்டு மொத்தமாக எல்லா கலேஞர் களையும் நான் குறை கூறவில்லே. இன் றும் கூட பல தலேசிறந்த கலேஞர்கள் ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் நன்கு உழைத்து, சிரத்தையுடன் நிகழ்ச் சியை வழங்கி இளைஞர்களிடமிருந் தும்கூட பாராட்டுக்களைப் பெறு வதையும் நான் மறுக்கவில்லே.

மொத்தத்தில் இளைஞர்களிடம் சாஸ்திரீயமான இசையை பரப்பும் பெரும் பொறுப்பு கலேஞர்களிடம் தான் அதிகம் என்பது எண்ணம். இதை மற்ற சக கலேஞர்களும் ஒப்புக் கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

திருமதி. பர்வீன் சூல்தானு (வாய்ப்பாட்டு)

சாஸ்திரீய இசையை இளைஞர்கள் ரசிப்பதேயில்லே என்று ஒட்டுமொத்த மாக முடிவு கட்டி விடுவது கண்மூடித் தனமாகும். பம்பாய் போன்ற மிகப்பெரிய நவநாகரீக நகரங்களில் வாழும் பலநூறு இளைஞர்கள் நல்ல சாஸ்திரீய இசையை விரும்பிக்கேட்டு ரசிக்கின்றனர். ஆனுல் சினிமாப் பாடல் ரசிகர்களின் எண்ணிக்கை யோடு இதை ஒப்பிட முடியாதுதான்.

டில்லியில் பல பல்கலேக்கழக மாண வர்கள் ஒன்று சேர்ந்து SPIC MACAY (Society for Promoting Indian Culture and Music amongest youth) என்ருெரு இயக் கத்தினை நடத்தி வருகின்றனர். இப் போது திருமலே திருப்பதி தேவஸ் தானம் நடத்துவதுபோல ஒவ்வொரு வருடமும் இந்த இளைஞர் இசை இயக்கம் 10 நாட்கள் மிகச் சிறப்பாக இசை விழாவினை நடத்துகின்றனர்.

இதைப் போல இந்தியாவிலுள்ள மற்ற பல்கலேக்கழகங்களிலும் சாஸ் திரீய இசையை இளைஞர்களிடம் பரப்பும் இயக்கங்களை ஆரம்பிக்க லாமே. அதற்கு என் போன்ற கலே ஞர்களின் பேராதரவு எப்போதும் உண்டு என்பது என் சககலேஞர்களின் சார்பிலும் தெரிவித்துக் கொள்வதில் பெருமகிழ்ச்சியடைகிறேன்.

திருமதி. சி. சரோஜா, சி. லலிதா (வாய்ப்பாட்டு)

இளைஞர்களை சாஸ்திரீய இசையை ரசிக்க வைக்கிறேன் பேர்வழி என்று கூறிக்கொண்டு பாரம்பர்யத்தை விட்டு விலகி விடுகிருர்கள் சில கலேஞர் கள். இளைஞர்களை கவர்வதற்காக அவர்கள் நிலேக்கு கலேஞர்கள் இறங் கிப் போகாமல், அவர்களை உயர்ந்த நிலேக்கு உயர்த்துபவர்களே உண்மை யான திறமையுள்ள கலேஞர்கள். அவர்களால்தான் இளைஞர்களை சாஸ் திரீய இசையின் நிரந்தர ரசிகர் களாக்க முடியும். சமீப காலங்களில் நம் இளைஞர்கள் இப்போது மீண்டும் நல்ல சாஸ்திரீயமான இசையை ரசிக்க ஆரம்பித்திருக்கிருர்கள் என்றே நினைக்கத் தோன்றுகிறது. நம் இளைஞர்களிடம் முதலில் இசை பற்றிய ஒருவித இமேஜினை ஏற்படுத் விட்டால் போதும். பிறகு அவர் களாகவே நம்மை பாடச் சொல்வார் கள். நமது இசைக்கு மனிதனை ஆட் கொள்ளும் சக்தி நிறையவே உண்டு. ஆனுல் சில கலேஞர்கள் இது புரியா மல் தமது திறமைகள் முழுவதையும் ஒரே சமயத்தில் காட்டி இளைஞர்களை பயமுறுத்துவதை உடனடியாக நிறுத்த வேண்டும்.

திரு. உஸ்தாத் தில்ஷத் ஸாஹேப் (வாய்ப்பாட்டு)

நம் நாட்டின் முதுகெலும்பு கிரா மங்கள்தான். கிராமங்கள் நம் நாட் டின் பொருளாரத்தை மட்டுமின்றி, கலாச்சாரத்தினையும் வளர்க்கும் இடங்களாகும். ஆனுல் இன்று கிரா மங்களின் நிலே என்ன? காலேயிலி ருந்து மாலே வரை மாடாய் உழைத் தாலும் கால்வயிறு கஞ்சி கூட மிஞ்சு வதில்லேயே. இந்த நிலேயில் நாம் அவர்களிடம் கலேயை இசையை வளர்க்க வேண்டும் என்று நகரங்களி லிருந்து கூச்சலிடலாமா!

நகரங்களில் ஓரளவு வசதிகளும், பல சௌகர்யங்களும் இருந்தும்கூட நகரத்தில் வாழ்பவர்கள் நமது கலே களை வளர்க்காமல், வெளிநாட்டுக் கலேகள் மீது மோகம் கொண்டு அலே கின்றனர். திருமலே திருப்பதி தேவஸ்தானம் போன்ற நிறுவனங் கள் திருப்பதி போன்ற பெரிய நகரங் களில் மட்டுமின்றி கிராமங்களிலும் கூட அவ்வப்போது சாஸ்திரீய இசை விழாக்களை நடத்த வேண்டும்.

திருமதி. எம். எல். வசந்தகுமாரி (வாய்ப்பாட்டு)

இன்றைய இளைஞர்களுக்குப் பொது வாகவே சாஸ்திரீயமான இசை மீது அவ்வளவு ஈடுபாடு இல்லேதான். ஆனுல் இதனுல் இளைஞர்களுக்குதான் இழப்பு. எவ்வளவோ நூறு ஆண்டு களுக்கு முன்பு பாடிய பாடல்கள் இன்றும் நிலேத்துள்ளன. இன்னும் பல நூறு ஆண்டுகள் நிலேத்திருக்கும் சிறிதும் சந்தேகமில்லே.

இன்று முதியவர்களாக இருப்பவர்களும் ஒரு காலத்தில் இளைஞர்களாக இருந்தவர்கள்தானே. இப்போது சினிமா என்றால் அப்போது நாடகம். ஒரு காலத்தில் இசை கச்சேரிகளுக்கும் நாடகங்களுக்கும் போட்டி இருந்தது. பிறகு நாடகம்,சினிமா இரண்டும் இசைக் கச்சேரிகளுக்கு போட்டியாய் அமைந்தன. இப்போது இதையெல்லாம் மிஞ்ச வீடியோ வந்துவிட்டது. அதனால் சினிமாவோ, நாடகமோ நசிந்து விட்டதா? இல்லையல்லவா. அது போலத்தான் இசையும் நசிந்து விடாது. காலமாற்றங்களினால் ஏற்படும் இத்தகைய பிரமைகள் காலப்போக்கில் தாமாகவே மறைந்து விடும்.

**திரு. பண்டித் ஜஸ்ராஜ் (வாய்ப்பாட்டு)**

இளைஞர்களுக்கு நமது இசை மீது அதிக விருப்பமில்லாததற்குக் காரணம் அவர்களுக்கு அதைப்பற்றி ஒன்றுமே தெரியாததுதான். சாஸ்திரீய இசை என்றால் ஏதோ முதியவர்கள் கேட்கும் பஜனைப் பாடல்கள் என்று அவர்கள் நினைத்துக் கொண்டிருந்தால் கூட வியப்பில்லை.

பல வெளிநாடுகளிலுள்ள பல்கலைக் கழகங்களில் அனைத்து faculty மாணவர்களுக்கும் கட்டாயமாக இசை ரசிப்பு(music appreciation)வகுப்புகளை நடத்துகின்றனர். ஆனால் நம் நாட்டு பல்கலைக்கழக விழாக்களில் டிஸ்கோ ஆடுகிறார்கள்.

அரசாங்கமோ, மற்ற கலை, கல்வி நிறுவனங்களோ யாருமே எந்த முயற்சியும் செய்யாமல் இளைஞர்கள் மீது பழி சுமத்துவது என்ன நியாயம்.

**முடிவுரை :**

நம் நாட்டின் பல தலை சிறந்த இசைக் கலைஞர்கள் தந்த பதில்கள் மிகவும் அறிவுபூர்வமாகவும், யதார்த்தமாகவும் அமைந்திருந்தன. அவர்களது அனுபவம் நிறைந்த கருத்துக்கள் என்னுள் ஒரு புத்துணர்ச்சியை உண்டாக்கியது.

ஆம், நம் பாரம்பர்யமான சாஸ்திரீய இசை சாகவில்லை, சாகாது. இன்னும் பல நூறு ஆண்டுகள் நிலைத்திருந்து நமதுமுன்னோரின் புகழையும் நமது புகழையும் நமது எதிர்கால சந்ததியினருக்கு எடுத்துக்கூறும்.

இளைஞர்களே! இனிமேல் உங்களை யாரும் சாஸ்திரீய இசையை ரசிப்பதில்லை என்று குறை கூற விட்டுவிடாதீர்கள். எவ்வளவோ துன்பங்களும் இன்பங்களும் நிறைந்த இந்த யுகத்தில் இசையின் மகிமையை அறிந்து கொள்ளமுயலுங்கள்.

---

(45-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

ரம் பவன நாராயணராவ் ஆகியோர் அன்னமய்யா, கன்னட தாஸர்கள், தியாராஜர், மற்றும் பல தென்னிந்திய வாக்யேக்காரர்கள் ஆகியோரின் கீர்த்தனைகளின் இலக்கிய பக்தி, சம்பந்தப்பட்ட உரைக்கோவைகளை வாசித்தனர்.

இந்நாட்களின் மாலை நேரங்களில் திருமதி. மணி கிருஷ்ணசுவாமி, திரு. நூகல சின்ன சத்ய நாராயண, பூனவைச் சேர்ந்த திரு. பீம்ஷென் ஜோஷி, டெல்லியைச் சார்ந்த திருவாளர்கள். ராஜன் மிஷ்ரா மற்றும் சாஜன் மிஷ்ரா சகோதரர்கள், திரு. டி. வி. கோபாலகிருஷ்ணன், திரு. ஜேசுதாஸ், திருமதி. வாணி ஜெயராம், திருமதி. சி. லலிதா மற்றும் சி. சரோஜா, திருமதி. எம். எல். வசந்தகுமாரி மற்றும் பம்பாயைச் சார்ந்த திரு. பண்டிட் ஜஸ்ராஜ் குழுவினர் ஆகியோரின் வாய்ப்பாட்டு இன்னிசைக் கச்சேரிகளும், சிக்கில் சகோதரிகளான திருமதி. குஞ்சுமணி மற்றும் திருமதி. லீலா ஆகியோரின் புல்லாங்குழல் இசைக் கச்சேரியும், புதுக்கோட்டை ஆர். கிருஷ்ண மூர்த்தி மற்றும் ஆர். ராமநாதன் ஆகியோரின் வீணை மற்றும் வயலின் சேர்ந்திசை இன்னிசைக் கச்சேரியும், திரு. அன்னவரபு ராமசாமி குழுவினரின் தனி வயலின் கச்சேரியும், பம்பாய் திரு. உஸ்தாத் தில்ஷத்கான் சாகேப் மற்றும் திருமதி. பர்வீன் சுல்தானா ஆகியோரின் ஜுகல்பந்தி கச்சேரியும், திரு. எல்லா வேங்கடேஸ்வர ராவ் குழுவினரின் மிருதங்கம் லயவிந்யாசக் கச்சேரியும் நடைபெற்றன.

31-5-86 அன்று மாலை நடைபெற்ற பிரிவு வாழ்த்துரை விழாவிற்கு வருகை புரிந்தோரை தி.தி.தே. செயலாட்சித் தலைவர் அவர்கள் வரவேற்க, விழாவிற்கு தி. தி. தே. இணை செயலாட்சித் தலைவர் திரு. வை. சக்ரதார ராவ் அவர்கள் தலைமை வகித்தார். விழாவிற்கு சிறப்பு விருந்தினராக பங்கேற்ற ஆந்திர மாநில தலைமைச் செயலர் திரு. ஸ்ரவண குமார் அவர்கள் பக்தியும் இசையும் இணைக்கும்படியான இதுபோன்ற இசை நிகழ்ச்சிகள் சாதாரண மனிதனையும் மேம்படுத்தும் வகையில் அமைந்திட வேண்டும் என்று கூறி, தி. தி. தே. மேலாண்மை இதுபோன்ற நிகழ்ச்சிகளில் காட்டி வரும் ஆக்கப் பூர்வமான முயற்சிகளைப் பாராட்டிப் பேசினார். பின்னர் தி. தி. தே. பாதுகாப்பு அலுவலர் திரு. கே. கிருஷ்ண மூர்த்தி அவர்கள் நன்றி நவின்றார்.

**புதிய நன்கொடைகள் :**

தி. தி. தேவஸ்தானம் திருமலையில் மேற்கொண்டு வரும் நித்ய அன்ன தான திட்டத்திற்கென பம்பாயைச் சார்ந்த திரு. எம். ஆர். சாப்ரியா சேரிடி அறநிறுவனம் ரூ. 10 இலட்சம் அளித்துள்ளது.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. S BBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAK MAR REDDY MANAGER, T. T. D.PRESS, TIRUPATI-517501.

